REGD.No. M. 6311 ★ தனி இதழ் 1 அணா ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: 55630

# நம் நாடு

தி.மு.க.தின இதழ் ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ★ The official organ of the D.P.F.

மலர் 3] சென்னை: ஆவணி 18உ சனி (3—9—55) ★ ★ வெளியீடு: ஆவணி 19உ ஞாயிறு (4—9—55) [இதழ் 70

## மத்திய பிரதேச மந்திரிசபைமீது நம்பிக்கையில்லாத் தீர்மானம்

பண்டித ரவி சங்கர் சுக்லாவை முதன்மந்திரியாகக் கொண்டுள்ள மத்திய பிரதேச மந்திரிசபைமீது, சட்டசபையில் உள்ள ம. சோ. கட்சியினர் ஒரு நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டுவந்திருக்கின்றனர்.

தீர்மானத்தை ஏற்றுக்கொண்ட சபைத் தலைவர், அவர் குறிப்பிடும் பிறிதோர் நாளில் அதுபற்றி விவாதம் நடைபெறும் என்று தெரிவித்திருக்கிறார்.

# வடவரின் வஞ்சனைக்கு ஆந்திரமும் பலி!

## 'வெந்த புண்ணில் வேல் நுழைத்த' நேருவுக்குக் கண்டனம்!

## 'ஆட்சி நேர்மையாகும் வரை ஆர்ப்பாட்டங்கள் நடந்தே தீரும்'

## 'பொறுமை இழந்தார்! புயலெனச் சீறினர்!'

## 'சர்வாதிகாரி போல ஓலமிட்டார்!'

பண்டித நேருவின் பாட்னா பேச்சுக்கு ஜெயப்பிரகாஷ் தரும் மறுப்பு

பாட்னா, செப். 2—

"பாட்னாவுக்கு பண்டித நேரு வந்தபோது, பாட்னா மக்கள், தங்களது வெந்த புண்ணுக்கு மருந்து தடவுவார்—தங்கள் துயர் நீக்க ஆறுதல் தருவார்—தங்களுக்கு நீதி கிடைக்க உறுதி வழங்குவார்—என்று எண்ணினர்; ஆனால், பண்டித நேருவோ, பாட்னா மக்களின் வெந்த புண்ணிலே வேல் பாய்ச்சியிருக்கிறார்; தன் நிலை இழந்திருக்கிறார்; உணர்ச்சி வயப்பட்டு கூட்டத்திலே கூவியிருக்கிறார்; போலீசாரின் வெறிச் செயலுக்கு எதிராகக் குரல் எழுப்பிய மக்கள்மீது பாய்ந்திருக்கிறார்;

"பிரிட்டிஷார் காலத்தில், போலீஸ் ஆட்சியை எதிர்த்தவர்கள் 'தேசபக்தர்கள்' என்று போற்றப்பட்டனர்; ஆனால், சுதந்திர காலத்தில், போலீஸ் அட்டூழியத்தை எதிர்ப்போர் 'தேசத் துரோகிகள்' என்று வர்ணிக்கப்படுகின்றனர்;

"பாட்னா சம்பவங்கள் பற்றி மக்கள் என்ன கருதுகிறார்கள்—என்ற உண்மையைத் தெரிந்துகொள்வதில் பண்டித நேரு சிறிதும் ஆர்வம் காட்டவில்லை; ஏன்—தனது கட்சியிலேயோ அல்லது, மந்திரி சபையிலேயோகூட பாட்னா சம்பவங்கள் பற்றி மாறுபட்ட கருத்து இருக்கிறதா என்பதைத் தெரிந்துகொள்ள நேரு முயற்சித்தாரா என்பது சந்தேகமே!

"சுதந்திரத்தின் 'தேசபக்தி'யின் பலாபலன்களைப் பற்றி மட்டும் பொதுக்கூட்டத்தில் உரக்கக் கூவியிருக்கிறார்; மாணவர்களும், மக்களும் வெறிச்செயல்களில் ஈடுபட்டதாகக் கூறப்பட்டதை மட்டும் திரும்பத் திரும்பக் கூறிக் கண்டித்திருக்கிறாரே தவிர, போலீசார் தரப்பில் கூறப்பட்ட குற்றச்சாட்டுக்கள் பற்றி ஒரு வார்த்தைகூடப் பேசக் காணோம்;

"நாம் நிகரற்ற-உயர்ந்த அதிகாரம் படைத்த நிலையிலிருக்கிறோம்—என்ற உணர்வினால், தன்னை மறந்து, சர்வாதிகாரப் போக்கில் அவர் பாட்னாவில் பேசியிருக்கிறார் போலும்!"

—என்று, பூமிதான இயக்கத்திற்குச் சென்று, 'இனி அரசியலுக்குத் திரும்பமாட்டேன்,' என்று கூறிவரும் ஜெயப்பிரகாஷ் நாராயண் ஒரு அறிக்கையில் குறிப்பிட்டிருக்கிறார்.

அவர் நேற்று முன்தினம் பண்டித நேருவுடன் இரண்டு மணி நேரம் பேச்சுவார்த்தை நடத்தினார்; எது பற்றி அவர்கள் பேசினர் என்பதை இருவரும் தெரிவிக்கவில்லை.

பண்டித நேரு பாட்னா சம்பவங்கள் பற்றி கடுமையாகப் பேசியதைக் கண்டித்து ஜெயப்பிரகாஷ் வெளியிட்டுள்ள அந்த அறிக்கையில் மேலும், காணப்படுவதாவது:—

"மாணவர்களின் 'தேசபக்தி'யை எவரும் சந்தேகிக்க முடியாது; பின் ஏன் 'தேசபக்தி' மிகுந்த இளைஞர்கள், தேசியக் கொடியை எரிக்கிற அளவுக்கு அறிவிழந்தனர்? இந்தக் கேள்வி குறித்து நாட்டுத் தலைவர்கள் தீவிரமாக சிந்தித்தாக வேண்டும்.

"கண்டனம், கேள்விக்கு விடையாக முடியாது; நமது இளைஞர்கள் நம்பிக்கை இழக்கும்போது, கூட்டம் கலவரத்திற்குத் தயாராகிறது;

"ஒரு நாட்டினை உருவாக்குபவர் மேலெழுந்தவாரியாகப் பார்த்துவிட்டு திருப்தியடைவதை எவரும் எதிர்பார்க்கமாட்டார்கள். நாட்டைஉருவாக்குபவர்கள், அடித்தளத்திலிருந்து விஷயங்களைக் கண்டு, அங்கிருந்து உருவாக்கும் வேலையைத் துவக்க வேண்டும்;

இதற்கு அளவற்ற பொறுமையும், அன்பும் தேவை; கோபமும், புயலுமல்ல!

'பண்டித நேரு, திரும்பத் திரும்பக் கூறியிருக்கிறார்—'சுதந்திரமான முன்னேறிய நாடுகளில் மாணவர்கள் ஆர்ப்பாட்டம் நடத்துவதையும், செயற்குழுக்கள் அமைத்துக் கொள்வதையும் நான் உலகில் வேறெங்கும் கண்டதில்லை'—என்று. இவை உண்மை என்று நான் நம்பவில்லை; 'தெரு ஆர்ப்பாட்டங்கள் போன்றவற்றிற்கான காலம் மலையேறிவிட்டது' என்று பண்டிதர் திரும்பத் திரும்பக் கூறியிருக்கிறார்

"ஆனால் பணிவன்புடன் சொல்ல விரும்புகிறேன்—நேருவின் சர்க்காரும், அதிகாரிகளும் நியாயமாகவும், நேர்மையாகவும் நடந்துகொள்ளுகிற வரையில், ஆர்ப்பாட்டங்களும், இன்னபிறவும் நடைபெற்றே தீரும்;

"ஜனநாயகம், சுதந்திரம் இவற்றில் பற்றுக் கொண்ட ஒருவர், ஆர்ப்பாட்டங்களைக் கண்டு ஏன், செயலற்றுப்போக வேண்டும்? இவை எல்லாம், ஜனநாயகத்தின் வழக்கமான வளர்ச்சிக் கட்டங்கள் தானே!

"பண்டித நேரு, ஒழுங்கு—அமைதி—சட்டம் இவை பற்றிய தமது கருத்தை மீண்டும் பரிசீலித்துப் பார்க்க வேண்டும். அவரைப் போலவே, மத்திய, மாநில சர்க்கார்களில் உள்ள மந்திரிகளும் எண்ணிப் பார்க்க வேண்டும்;

"போலீஸ் சீர்திருத்தம், சட்டம், ஒழுங்கு இவை பற்றி முழுவதுமாக விசாரித்தறிய ஒரு குழுவினை உள்நாட்டு மந்திரி பண்டித பந்த் நியமிக்க வேண்டுமென நான் பணிவன்புடன் தெரிவித்துக் கொள்கிறேன்."

### அறிவியுங்கள்!

"நீர்வளிக்குண்டு, அணுசக்தி ஆகியவைகளின் சோதனைகளால், மனித குலத்தின் சுகாதாரத்துக்கும், காற்றுக்கும் ஏற்படக் கூடிய பாதகங்களை, உலகநாடுகள் அனைத்துக்கும் அறிவிப்பது-பற்றி ஐ. நா. விவாதிக்க வேண்டும்," என்று ஐ. நா. சபையில் இந்தியா பிரரேபித்துள்ளதாம்.

## ரூபாய் 245 கோடி திட்டம் ரூபாய் 118 கோடியாகக் குறைந்தது!

## காவடி தூக்கிய ஆந்திர மந்திரிகள் ஏமாற்றம்!

## தென்னாட்டு மாநிலங்களின் கதி?

புதுடில்லி, செப். 2—

ஆந்திர மாநிலத்திற்கும்—ஏற்கனவே எதிர்பார்த்தபடி—வடநாட்டவர், பட்டை நாமம் தீட்டிவிட்டிருக்கின்றனர், இரண்டாம் திட்டத்தில்!

ரூ. 800 கோடியாக இருந்து ரூ. 500 கோடியாகக் குறைந்து, சுமார் ரூ. 245 கோடியாக—திட்டக் குழுவின் துணைத் தலைவர் யோசனைப்படி சிறிதாக்கப்பட்ட ஆந்திர மாநிலத்தின் இரண்டாம் திட்டத்தையும் சரிபாதி அளவாக, 'டில்லி'யார் வெட்டிவிட்டிருக்கின்றனர்.

ரூ. 245 கோடி பெறுமான திட்டத்தைத் தூக்கிக் கொண்டு, டில்லிக்கு ஆந்திர முதன் மந்திரி கோபால ரெட்டி, உதவி மந்திரி சஞ்சீவி ரெட்டி, திட்ட மந்திரி காளா வெங்கட்ராவ் ஆகியோர் 'காவடி' எடுத்தனர்—சென்னை மந்திரிகளைப் போலத்தான்!

இவர்களும், சென்னையரைப் போலவே திட்டக் குழுவிடம் குறைகளை முறையிட்டனர்; 'திட்டத்தை வெட்டக் கூடாது' என மன்றாடியிருக்கின்றனர்;

என்றாலும், ஆந்திரக் கோரிக்கையை ஏற்றுக்கொள்ள வடநாட்டவர் தயாராக இருக்கவில்லை;

ரூ. 244·43 கோடி பெறுமான திட்டத்தை சரிபாதிக்கும் குறைவாக—ரூ. 118 கோடி அளவுக்குக் குறைத்துவிட்டிருக்கின்றனர்.

சென்னையைப் போலவே ஆந்திரமும் வஞ்சனைக்கு ஆளாக்கப்பட்டிருக்கிறது—தென்னாட்டு மாநிலம் என்ற காரணத்தால்!

## ஆங்கில மொழி ஒழிக்கப்படுவதற்கு கவர்னர் பிரகாசா எதிர்ப்பு

## 'வெள்ளையர் காலத்தில்தான் இந்தியா அரசியல் ரீதியாக ஒன்றுபட்டது!'

## 'என்றாலும் 'ஏக இந்தியா' நிலைக்க வேண்டும்'

### உண்மையும், 'தத்துவமும்'!

சேலம், செப். 2—

"இங்கிலாந்தைவிட்டு ரோமானியர்கள் வெளியேறி 1,900 ஆண்டுகளுக்குப் பின்னும், ஆங்கிலேயர்கள் லத்தீன் மொழியைப் பாதுகாத்து, முக்கியமான சர்க்கார் அலுவல்களுக்கு அதைப் பயன்படுத்தி வருகின்றனர்; இது இவ்வாறிருக்கும் போது, இங்கு இந்தியாவில் மட்டும், ஆங்கிலேயர்கள் வெளியேறிய உடனே ஆங்கில மொழியை ஒழித்துவிட முயற்சிப்பது ஏன் என்று எனக்குப் புலப்படவில்லை;

"தற்போது நாம், ஆங்கில மொழியைப் பாதுகாக்கவேண்டும்; நமது வட்டார மொழிகளையும் வளமுடையதாக்கிக் கொள்ள வேண்டும்."

—என்று, சென்னை கவர்னர் பிரகாசா, இராயப்பேட்டையில் சர்தார் கே. எம். பணிக்கர் பேசிய கூட்டமொன்றிற்குத் தலைமை ஏற்று உரை நிகழ்த்துகையில் குறிப்பிட்டிருக்கிறார்.

மேலும் அவர் குறிப்பிட்டதாவது:—

"மாநில புனரமைப்புக் குழுவின் அறிக்கை, இந்தியாவின் ஒற்றுமையை நிலைநாட்டுகிற எதிர்காலத்தை நமக்குத் தெரிவிக்கவிருக்கிறது;

"ஒரு பிளவுபட்ட நாயகமாக இந்தியா இருக்காது; ஆனால், ஒன்றுபட்ட நாயகமாக இந்தியா இருக்குமென நம்புகிறேன்;

"இந்தியா அரசியல் ரீதியாக வெள்ளையர் காலத்தில்தான் ஒரே நாடாக உருவாக்கப்பட்டது;

(4-ம் பக்கம் பார்க்க)

## இடங்களின் பெயர் மாற்றம்

## இந்திய சர்க்காரின் கொள்கை

ஐதராபாத், செப். 2—

இடங்களின் பெயர்களை மாற்று[illegible] கொள்கை குறித்து இன்று ஐதராபாத் சட்ட சபையில் விளக்கப்பட்டிருக்கிறது.

(2) மக்களுக்கு பழக்கப்பட்டிருக்கிற ஒரு இடத்தின் பெயரை தனியான காரணங்கள் இருந்தாலன்றி மாற்றியமைத்தல் விரும்பத் தக்கதல்ல;

(2) கூடியவரையில், சரித்திரத் தொடர்பு கொண்ட கிராமங்களின் பெயர்கள் மாற்றப்படக் கூடாது;

(3) உள்ளூர் பற்று, மொழிக் காரணங்களுக்காக இடங்களின் பெயர்கள் மாற்றப்படக் கூடாது; கிராமங்களுக்கு தேசியத் தலைவர்களின் பெயரை வைக்கக்கூடாது;

(4) பெயர் மாற்றங்களுக்கான பரிசீலனை செய்யும்போது, மாநில சர்க்கார், பெயர் மாற்றத்திற்கான விரிவான காரணங்களையும் தெரிவிக்க வேண்டும்—என்பவைதான், பெயர் மாற்றத்திற்கான இந்திய சர்க்காரின் கொள்கைகள் என்று கூறப்பட்டிருக்கிறது.

நம் நாடு
தி. மு. க. தின இதழ் ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன்

சென்னை 3-9-'55 சனி

# புரியும்படி சொல்லுவர்!

சென்னை சர்க்கார் தயாரித்த இரண்டாம் ஐந்தாண்டுத் திட்ட நகல் ரூ. 400 கோடி மதிப்புடையது.

திட்டக் குழு, அதனைப் பாதியாக வெட்டி ரூ. 200 கோடி பெறுமான 'திட்டத்தையே அனுமதித்தது.

இந்த உண்மையைக் கண்ணுள்ள எவரும் மறுக்கமாட்டார்கள்.

சென்னை சட்டசபையில் இந்த வெட்டப்பட்ட திட்டம் குறித்து நடைபெற்ற விவாதத்திற்குப் பதிலளிக்கையில் கனம் சுப்பிரமணியம், 'சென்னைக்குக் கிடைத்த பங்கு (ரூ. 200 கோடி) நியாயமானதே!'என்று குறிப்பிட்டிருக்கிறார்.

இதே கனம் சுப்பிரமணியம் தான், முதலில் திட்டத்தைச் சுமந்துகொண்டு டில்லிக்குக் காவடி தூக்கியபோது குறிப்பிட்டார்—'நம்மால் செயல்படுத்தக்கூடிய ஒன்று; உண்மை நிலைகளுக்கு ஒத்தது; நியாயமான அளவு கோரிக்கை' என்றெல்லாம் பேசினர்.

சுமார் ரூ. 400 கோடி பெறுமான திட்டத்தைத் தயாரித்து, 'இதுவே எங்களது நியாயமான கோரிக்கை; இதனை நிறைவேற்ற வேண்டும்' என்று கூறிய மந்திரி, சில நாட்களுக்குப் பிறகு 'ரூ. 200 கோடியாகக் குறைக்கப்பட்டுள்ள போதிலும் திட்டம் போதுமானதே! நமக்கு நியாயமான பங்கு கிடைத்திருக்கிறது' என்று பேசுகிறார்.

எது நியாயமான பங்கு—ரூ. 400 கோடி பெறுமான திட்டமா? அல்லது ரூ. 200 கோடி பெறுமான திட்டமா?—கனம் சுப்பிரமணியத்தின் முரண்பட்ட கூற்று மக்களுக்குப் புரியாமலிருக்க முடியாது.

ரூ. 400 கோடிக்குத் திட்டம் தீட்டி, 'அதுவே நியாயமானது' என்று தாங்கள் மட்டும் கூறினால் போதாதென்று டெல்லி சென்று, மந்திரி டி.டி.கிருஷ்ணமாச்சாரியார் வீட்டில் சென்னை மாநிலத்தைச் சேர்ந்த எல்லா மக்கள் சபை உறுப்பினர்களையும் கட்சி வேறுபாடின்றிக் கூட்டி, அவர்களிடமும் திட்டத்தைக் காட்டி, அவர்களின் ஆதரவையும் பின்னணியாகக் கொண்டு, 'எங்கள் கோரிக்கை நியாயமானதே' என்று திட்டக் குழுவிடம் முறையிட்டார், மந்திரி சுப்பிரமணியம்!

இப்போது, 'ரூ. 200 கோடி திட்டமே நியாயமானது' என்கிறார்! எப்படி?

'ரூ. 400 கோடி திட்டம் கூட, சென்னைக்குக் கிடைக்க வேண்டிய நியாயமான பங்கிற்குச் சமமாகாது—குறைவானது,' என்று, பல மக்கள் சபை உறுப்பினர்கள் எடுத்துக் காட்டினர்—மந்திரி சுப்பிரமணியத்தை வைத்துக்கொண்டு தான்; ஆனாலும், 'ரூ. 200 கோடி திட்டமே நமக்கு நியாயமானது' என்று இப்போது கூறுகிறார்; எப்படித்தான் இந்த இரட்டை நாவினர் மந்திரிகளாய் நீடிக்கின்றனரோ?

'ரூ. 400 கோடியே நியாயம்' என்று நவின்ற நாக்கு, சில நாட்களுக்குப் பிறகு, 'ரூ. 200 கோடியே நியாயம்' என்று எப்படித்தான் பிறழ்கிறதோ?

ரூ. 200 கோடித் திட்டம் தான் நியாயமான பங்கு என்றால், இவர் ஏன், ரூ. 400 கோடி பெறுமான அளவிற்கு ஒரு திட்டத்தைத் தயாரித்தார்? அப்படியானால், 'முதலில் தயாரித்தத் திட்டம் அநியாயமானது—பேராசையானது,' என்றாவது இவர் ஒப்புகிறாரா என்றால், அதுவும் இல்லை!

திட்டத்தை, தனது வடநாட்டு எஜமானர்கள் சரிபாதியாக வெட்டியபோது, இந்த மந்திரி தொங்கிய முகத்துடன் சென்னை திரும்பியபோது முகாரி பாடினர்—"எத்தனையோ எடுத்துச்சொன்னோம்; 'சென்னை ஏற்கனவே பின் தங்கிக்கிடக்கிறது,' என்று குறிப்பிட்டுக் காட்டினோம்; 'திட்டத்தை சுருக்கக்கூடாது' என்பதற்கான அவசியத்தை வலியுறுத்தினோம்; என்றாலும், திட்டக் குழு, 'ரூ. 200 கோடிக்கு மேல் தரமுடியாது' என்று கூறிவிட்டது; என் செய்வது? உண்மை நிலையைத் தெளிவாக விளக்கினோம்! என்றாலும், இத்தனை அளவுதான் பெறமுடிந்தது!"—என்று ஓலமிட்டார்.

ஏன்? சென்னை கேட்ட ரூ. 400 கோடி திட்டம் நியாயமானது என்று நம்பினர்; அந்த நம்பிக்கை நாசமாய்ப் போனதினால், ஓலமிட்டார்; அதுதானே காரணம்?

பின்னர், பத்து நாளைக்குப் பிறகு சட்டசபையில், ரூ. 200 கோடி திட்டமே நியாயமானது என்று கூற மனச் சாட்சி எப்படித்தான் அவருக்கு இடம் தந்ததோ?

"என்ன செய்வது; எல்லாம் 'பதவிநாதன்' அருள்" என்று கூறிவிட்டு, மக்கள் வாளாவிருந்துவிட மாட்டார்கள்.

இந்த 'இரட்டை நாக்கு' படைத்த மந்திரியார்தான், 'தென்னாடு புறக்கணிக்கப்படவில்லை' என்றுவேறு, சட்டசபையில் பேசுகிறார்.

மீண்டும் இந்தக் 'கனம்' தமது 'பெரியநாய்க்கன்பாளைய' நாக்கினை தன்னைச் சுழற்றித் திருப்பிப் பார்க்க வேண்டும்—"ஐந்தாண்டுத் திட்டத்தில் தென்னாடு புறக்கணிக்கப்பட்டிருக்கிறது; இந்த நிலை நீடிக்குமானால் இந்தியாவின் அரசியலில் 'ஆபத்தான கொந்தளிப்பு' ஏற்படும்" என்று கூறிய நாக்கும், கனம் சுப்பிரமணியத்தினுடையதுதானே! தான் கூறியது தனக்கே மறந்துபோய்விட்டதாக உண்மை உள்ளம் கொண்ட எவரும் கூறி நம்பித்துக்கொள்ள முடியாதே! 'தென்னாடு புறக்கணிக்கப்படுவதாக—திராவிட நாடு வேண்டும் என்போரே கூறுகின்றனர்,' என்று நம்மீது பழியைப் போட்டு, உண்மையை ஒளித்து வைக்க முயற்சிக்கிறார்.

'ஆவடி'யில் திருமதி அம்புஜத்தம்மாள்—மக்கள் சபையில் திருமதி அன்னி மாஸ்கரீன் அம்மையார் — சென்னை தொழிலதிபர் அனந்தராம கிருஷ்ணன்—டில்லியில் சர். ஏ. இராமசாமி முதலியார் — மைசூர் தொழில் மந்திரி சென்னபாசப்பா — முதலியோரெல்லாம், 'திராவிட நாடு திராவிடருக்கே' என்ற இலட்சிய கீதத்தை முழக்கும் தி.மு. கழக முன்னணி வீரர்களா — என்பதை கனம் சுப்பிரமணியம் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

"வடநாடு தென்னாட்டின் மீது ஆதிக்கஞ் செலுத்தவில்லை; 'ஆளப்படுகிறோம்' என்ற தாழ்வு மனப்பான்மை கூடாது" என்றுவேறு, இந்த 'கனம்' வாய்ப்பறை சாற்றியிருக்கிறார் — சட்டசபையில்!

'ஆளப்படவில்லை' என்றால், இந்த மந்திரி தனது மாநிலத்தின் அபிவிருத்திக்கென தான் அங்கம் வகிக்கும் சர்க்கார் தீட்டிய திட்டத்தைத் தூக்கிக்கொண்டு ஏன் டில்லிக்குக் காவடி எடுத்தார்? டில்லி ஆட்சியாளர்களின் 'அனுமதி'யுடன்தான், திட்டம் நிறைவேற வேண்டுமென்றிருக்கும் ஒரு நிலையே, 'இவர் ஆளப்படுகிறார்' என்பதைச் சொல்லவில்லையா?

மந்திரி சுப்பிரமணியம் திட்டத்தைத்தூக்கிக்கொண்டு ஒடி, தனது சட்டப் படிப்புத் திறனை முழுவதுமாகப் பயன் படுத்தி வாதாடியும், 'வெட்டியே தீருவேன், உனது திட்டத்தை,' என்று திட்டக் குழுவும், இந்திய சர்க்காரும் கூறினரே! அதுவே போதுமானதல்லவா, 'தென்னாட்டில் வடநாட்டவர் ஆதிக்கஞ் செலுத்துகின்றனர்' என்பதை எடுத்துக்காட்ட?

'அது போதுமானதல்ல' என்றால், புரட்டிப் பார்க்கட்டும்—நமது கழகம் காட்டி வந்திருக்கின்ற கணக்கற்ற காரணங்களை; அப்போதும் புரியவில்லை என்றால், திராவிட மக்கள் 'ஒரு நாளை'க்கு, இந்த மகானுபாவருக்குப் புரியும்படி சொல்லுவார்கள்!

## தமிழ் மொழிக்குப் 'புகழ் மாலை'

### வடநாட்டுத் தலைவர் உரை

"அரசியல், கலாச்சாரக் கருத்துக்களைத் தெளிவான சொற்களின் மூலம் எடுத்துரைக்கும் இயல்பு வாய்ந்த சக்தியைத் தமிழ் மொழி திறம்படப் பெற்றுள்ளது; மில்டன், ஷேக்ஸ்பியர், காளிதாசன் போன்றவர்களின் இலக்கிய அற்புதங்கள், எவ்வாறு ஒரு குறிப்பிட்ட சமூகத்திற்கே ஒன்றில்லாமல், உலக சமூகத்திற்கே சொந்தமாக இருக்கிறதோ, அவ்வாறே தமிழ் மொழி இலக்கியங்களும் நாட்டு மக்களெல்லோருக்கும் உரித்தானதாக விளங்குகிறது,"

என்று, கல்கத்தாவில், தமிழ் மாணவர் மன்றத்தின் இரண்டாம் ஆண்டு விழாவைத் துவக்கி வைத்துப் பேசிய வங்க முன்னாள் அமைச்சர் விஜய பிரசாத் சிங் ராய் குறிப்பிட்டார்.

## தாராள நிதி உதவி

தனக்கு இந்திய அரசாங்கம் அளித்த ரூ. 50 இலட்சத்தையும் வட்டியின்றி துங்கபத்திரா அணை திட்டத்திற்காக நிசாம் கடனாகக் கொடுத்துள்ளாராம்; அன்றியும், இந்திய அரசாங்கக் கடன் பத்திரங்களில் ரூ 35 கோடி போட்டுள்ளாராம்; ஐதராபாத் அரசாங்கத்துக்கு ரூ. 19 கோடி கடனாகத் தந்துமுள்ளாராம்!

## காங்கிரஸ் கட்சியின் 'கொள்ளை'

### குறைந்த விலையில் கட்டிடம் விற்கப்பட்டிருக்கிறது

### இமாசலப் பிரதேச சட்டசபையில் குமுறல்

"சர்க்காருக்குச் சொந்தமான சொத்து குறைந்த விலையில் விற்கப்பட்டிருக்கிறது; ஒரு நிலம், நீண்டகால குத்தகைக்கு விடப்பட்டிருக்கிறது; மாவட்ட காங்கிரஸ் கட்சியின் முன்னாள் செயலாளர் ஒருவருக்கு சர்க்காருக்குச் சொந்தமான ஒரு கட்டிடம் மிக மலிவான விலைக்கு விற்கப்பட்டிருக்கிறது; 'இவை ஆட்சியிலிருக்கும் கட்சியினர் அடிக்கும் கொள்ளை' யாகும்,"

என்று, இமாசலப் பிரதேச சட்டசபையில் ஒரு எதிர்க் கட்சி உறுப்பினர் இடித்துரைத்திருக்கிறார்.

சுவாமி கிருஷ்ணானந்த் என்ற அந்த உறுப்பினர், 'கொள்ளை' என்று கூறிய சொல், சட்டசபை மரபுக்கு முரணானது — என்று சபைத் தலைவர் குறிப்பிட்டு, 'அந்த வார்த்தையைத் திரும்பப் பெற்றுக் கொள்ள வேண்டும்,' என்று குறிப்பிட்டிருக்கிறார்.

உறுப்பினரும், தான் உபயோகித்த 'கொள்ளை' என்ற அந்தச் சொல்லைத் திரும்பப் பெற்றுக் கொண்டிருக்கிறார்.

## 'சத்தியாக்கிரகமா?'

### பாகிஸ்தான் சர்க்கார் பொருட்படுத்தவில்லையாம்

சில பாகிஸ்தானியர்கள், காஷ்மீரில் சத்தியாக்கிரகம் செய்யப் போவதாகக் கூறிக்கொண்டிருப்பதை பாகிஸ்தான் அதிகாரிகள் பொருட்படுத்தவில்லையாம்.

### சமாதான முறைகளால் சாத்தியமில்லையாம்!

"சமாதான முறைகளால் காஷ்மீரை விடுவிப்பதென்பது சாத்தியமில்லை; இருநாட்டுப் பிரதமர்களும் இதுபற்றி இனி சந்தித்துப் பேசுவது ஆபத்தானதேயாகும்; காஷ்மீரை விடுவிப்பதற்கு அஹிம்சை முறையில் சத்தியாக்கிரக இயக்கம் நடத்துவது என்பது இஸ்லாத்திற்கு முரணானதாகும் என்று ஆசாத் காஷ்மீர் முஸ்லீம் மாநாட்டின் தலைவர் சர்தார் அப்துல் கய்யூம் அறிவித்துள்ளார்.

## முன்னாள் மந்திரிக்கு 5 மாதக் கடுங்காவல்

அமிருதசரஸ், செப். 1—

அகாலி தளக் கிளர்ச்சியின் மூன்றாவது 'சர்வாதிகாரி'யும், 'பெப்சு'வின் முன்னாள் நிதி மந்திரியுமான—சர்தார் போபீந்தர் சிங்மானுக்கு, சட்டத்தை மீறி பொதுமக்கள் அமைதியைக் குலைக்கும் வகையில் கிளர்ச்சி செய்ய மக்களைத் தூண்டிவிட்டார் என்று சாட்டப்பட்டிருந்த குற்றத்தின் மீது 5 மாதக் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டிருக்கிறதாம்.

### மத்தியதர வகுப்பினருக்கு

## குடியிருப்புத் திட்டம்

இன்ஷ்யூரன்ஸ் நிறுவனங்களின் உதவியுடன் மத்தியதர வருமான முள்ளவர்களுக்கு வீடுகட்டும் திட்டம் ஒன்றை இந்திய சர்க்கார் வகுத்திருக்கிறதாம்.

உயர்ந்தபட்சம் ஒரு வீடு கட்டுவதற்கு ரூ. 25,000 உதவி அளிக்கப்படுமாம்; ஒரு நபருக்கு ஏற்கனவே, ஒரு வீடு இருந்தால் அவருக்குக் கடன் உதவியோ, அல்லது கட்டியுள்ள வீடு வாங்குவதற்கோ வசதி அளிக்கப்படமாட்டாதாம்.

## கட்டாய இந்திக்கு

### மாவட்ட போர்டு எதிர்ப்பு

வேலூர், ஆக. 31—

சென்னை மாநிலத்தில் இந்தியைக் கட்டாயமாகப் புகுத்தும் உத்தேசத்தை திரும்பப் பெறுமாறு மாநில சர்க்காரையும் இந்திய சர்க்காரையும் கேட்டுக் கொண்டு, வட ஆற்காடு மாவட்ட போர்டு கூட்டத்தில் தீர்மானம் ஒன்று நிறைவேற்றப்பட்டுள்ளதாம்.

## 3-வது உருக்குத் தொழிற்சாலை

### இந்தியாவின் அழைப்பை பிரிட்டன் ஆலோசிக்கும்?

இந்தியாவில் மூன்றாவது உருக்குத் தொழிற்சாலையை நிறுவுவது சம்பந்தமாக இந்தியாவிடமிருந்து வந்துள்ள அழைப்பை, பிரிட்டிஷ் நிதி உருக்கு நிறுவனத்தின் டைரக்டர்கள் கூடி விவாதிப்பர்.

பிரிட்டிஷ் உருக்குத் தூதுக் குழுவின் சிபாரிசுகளை இந்திய சர்க்கார் ஏற்றுக் கொண்டது நினைவிலிருக்கலாம்; அச் சிபாரிசுகளின் படி, 10 இலட்சம் டன் உற்பத்தி சக்தி கொண்ட ஒரு உருக்குத் தொழிற்சாலை ஏற்படுத்தப்படும்.

மற்ற உருக்கு சாமான்களோடு இரயில்வேக்குத் தேவையான சக்கரங்கள், அச்சுக்கள் முதலியனவும், 35,000 டன் தேனிரும்பும் இதில் உற்பத்தியாகும்.

## ஐ. நா. மீது இந்திய அதிகாரி வழக்கு

தற்போது, இந்திய சர்க்காரின் ஒரு அதிகாரியாக இருந்துவருபவரும், புதுடில்லி ஐ.நா.செய்தி நிறுவனத்தின் முன்னாள் துணை-டைரக்டருமான குமார் சடோபாத்தியாயா என்பவர், காஷ்மீர்-கொரியா பிரச்சினைகளில் ஐ. நா. கொள்கை மீது அதிருப்திகரமான போக்கில் நடந்துகொண்டதாக, தாம் 'டிஸ்மிஸ்' செய்யப்பட்டதாகவும், அவ்வாறு செய்தது தவறு என்றும் பாரபட்சமின்றியே ஐ. நா. பிரமாணப்படி தன் கடமையை ஆற்றியுள்ளதாகவும், எனவே, நஷ்டஈடாக, மூன்றாண்டு சம்பளத் தொகையான 24,800 டாலர்களைத் தனக்கு வழங்க வேண்டுமென்றும், ஜினீவாவில், ஐ. நா. நிர்வாக மன்றத்தின் முன் வாதாடியுள்ளார்.

## அவர் நம்பிக்கை?

சென்னை, செப். 1—

"இம்மாநிலத்திலுள்ள எல்லா சிறுவர்களுக்கும் எஸ். எஸ். எல். சி., வரை இலவசப் படிப்பும், ஐந்தாவது வகுப்பு வரை இலவசப் பகல் உணவும் அளிக்கப்பட வேண்டுமென்பதே என்னுடைய ஆவலாகும்; படிப்படியாக இதைச் செய்துவிட முடியுமென நம்புகிறேன்."

என்று, முதலமைச்சர் காமராசர், கூட்டமொன்றில் பேசுகையில் குறிப்பிட்டுள்ளார்.

## காங்கிரஸ்காரர் மீது நடவடிக்கை

நகரசபைத் தேர்தல்களில் காங்கிரஸ் அபேட்சகர்களை எதிர்த்துப் போட்டியிடுவதாலும், அவர்களுக்கு எதிராகத் தீவிரப் பிரசாரம் செய்து வருவதாலும் நகர காங்கிரஸ்காரர்களில் பத்து பேரை, த. நா. கா. க. தலைவர் 'சஸ்பெண்ட்' செய்துள்ளார்.

'சஸ்பெண்ட்' செய்யப்பட்டுள்ளவர்களில் 6-பேர், காங்கிரஸ் அபேட்சகர்களை எதிர்த்துப் போட்டியிடுகின்றனர்.





## 30 இலட்சம் புத்தகங்கள் கொண்ட புத்தகசாலை

### சுரங்க பாதைகொண்ட மாளிகையில் அமையும்

### மக்கள் சபை உறுப்பினர்களுக்காக டில்லியில் ஏற்பாடு

புதுடில்லி, ஆக. 31—

மக்கள்சபை உறுப்பினர்களின் உபயோகத்திற்கென அமைக்கப்படவிருக்கிற பிரம்மாண்டமான புத்தகசாலையும், ஆராய்ச்சிக் கூடமும் அமையும் கட்டிடத்திற்கும்—மக்கள் சபைக்கும் இடையே, பூமிக்கடியில் சுரங்கப் பாதை அமைக்கப்படும் என்று தெரிகிறது. இதுதான், புதுடில்லியில் அமையும் முதல் பாதாளப் பாதையாகும்.

இந்த மாளிகையை அமைப்பதற்கான திட்டம் பரிசீலிக்கப்பட்டு முடியும் தருவாயிலிருக்கிறதாம்.

சுமார் 150 கெஜம் பாதையின் நீளமிருக்குமாம்; இந்தப் பாதை அமைவதனால், புதிய கட்டிடத்திற்குச் செல்வதற்கு, சர்க்கார் அலுவலக ஊழியர்களும், மக்கள் சபை உறுப்பினர்களும் இதர சாலைகளைக் கடக்க வேண்டிய அவசியமில்லையாம்.

இந்தப் பாதையில் நல்ல விளக்கொளி ஏற்பாடுகளிருப்பதுடன், 'ஏர் கண்டிஷன்' ஏற்பாடுகளும் இருக்குமாம்.

இந்தப் பாதையில் மின்சார டிராலிகளும்கூட விடப்படுமாம்.

புத்தகசாலையில், எல்லா பொதுத் துறைகளையும் பற்றிய 30,00,000 புத்தகங்கள் இடம் பெறும் என்றும், மேலும், மத்திய சட்டசபை துவங்கிய நாளிலிருந்து உள்ள எல்லா தஸ்தாவேஜுகளும் அங்கு இருக்குமென்றும் கூறப்படுகிறது.

## புதிய 'தசாம்ச' நாணய செலாவணி

### அடுத்த ஆண்டு அக்டோபர் முதல் அமுலுக்கு வரும்

புதுடில்லி, செப். 1—

இந்தியாவில், புதிய முறை நாணயங்களின் செலாவணி 1956 அக்டோபர் முதல் அமுலுக்கு வருமென எதிர்பார்க்கப்படுகிறதாம்!

புதிய தசாம்ச நாணய முறைப்படி 1 ரூபாய்க்கு 100 பைசாக்கள் இருக்கும்.

இம்முறை அமுலுக்கு வந்தவுடனேயே இப்போதுள்ள நாணயங்கள் (காலணா, அரையணா, ஒரு அணா ஆகியவை) உடனடியாகத் திரும்பப் பெறப்படமாட்டாது என்றும், புதிய நாணயங்களுடன் அவைகளும் 4 ஆண்டு காலத்திற்கு செலாவணியில் இருந்துவிடுமென்றும் கருதப்படுகிறது.

ஒரு ரூபாயில் 100-ல் ஒரு பங்கு நாணயத்திற்குப் பல நாடுகளில் 'சென்ட்' என்ற பெயர் வழங்கப்படுகிறது; ஆனால், இந்தியாவில் அதை 'நய பைசா' (புதிய பைசா) என்று அழைப்பார்கள்;

25 பைசா கால் ரூபாயென்றும், 50 பைசா அரை ரூபாயென்றும், 100 பைசா ஒரு ரூபாயென்றும் தற்காலிகமாக அழைப்பதென முடிவு செய்யப்பட்டுள்ளதாம்.

## சீன—இந்தியப் பிரதமர்கள் சந்திப்பு?

லண்டன், ஆக. 31—

சீனப் பிரதமர் சௌ-என்-லாய், இந்தியப் பிரதமர் நேருவை சந்திக்கக் கூடும் என்ற கருத்து வலுத்து வருகிறது.

இந்தோ-சீன தேர்தலை தள்ளிப் போட்டுவரும் தந்திரம், கொரியாவில் ஒருநிலைமைக் குழுவிற்கு எதிராக சிங்மன் ரீ நடத்திவரும் 'ஆர்ப்பாட்ட நாடகம்,' அமெரிக்காவை நம்புவதை ஜப்பான் குறைத்துக்கொள்ள விரும்பும் நிலை இவை உள்ளிட்ட அரக்கிழக்கு நிலை பற்றி, சீனப் பிரதமர், இந்தியப் பிரதமருடன் சந்தித்துப் பேச ஆவல் கொண்டிருப்பதாகக் கூறப்படுகிறது.

'உலக நெருக்கடியைத் தணிக்க, இன்னும் ஏதேனும் செய்தாக வேண்டும்,' என்று, சீனப் பிரதமர் கருதுவதும், சந்திப்பிற்கான வாய்ப்பை அதிகரிப்பதாகக் கூறப்படுகிறது.

சௌ—என்—லாய், எகிப்து பிரதமர் நாசரின் அழைப்பின் பேரில், அடுத்த இரு மாதங்களுக்குள் கெய்ரோ செல்லவிருக்கிறார்; அப்போது, புதுடில்லியில் சில நாள் தங்க ஏற்பாடு செய்யப்படலாம் என்று கூறப்படுகிறது.

### ஆசிய நாடுகளுக்கும் பயிற்சி வசதி!

"இந்தியாவில் அணு உலை ஏற்படுத்தப்பட்டால், அதில் ஆசிய நாடுகளுக்கும் பயிற்சி வசதி அளிக்கப்படும்" என்று, மக்கள் சபையில் பிரதமர் நேரு அறிவித்துள்ளார்.

## புரட்சித் தலைவர் சிங்

காட்மண்டு, செப். 1—

நேபாளப் புரட்சித் தலைவர் டாக்டர் கே. ஐ. சிங், நேபாள எல்லைக்குள் நுழைந்ததும், நேபாளத் துருப்புகளிடம் சரணடைய வேண்டும் என்றும், பின் அங்கிருந்து காட்மண்டு சென்றதும்—அவர் விரும்பினால்—நேபாள மன்னரிடம் மன்னிப்பு வழங்கக் கோரலாம் என்றும், அப்படி ஒரு மன்னிப்புக் கோரிக்கையை நேபாள மன்னர் ஏற்றுக்கொள்வது சாத்தியமே என்றும் அதிகாரபூர்வமாக அறியவருகிறது.

## சுதந்திர நாக நாடு கோரிக்கை!

### நாகர் தேசீயக் கவுன்சில் மீண்டும் கூடுகிறது

ஷில்லாங், செப். 1—

கடந்த எட்டு ஆண்டுகளாக, 'சுதந்திர நாக நாடு' அமைக்க வேண்டும் என்பதற்காக இயக்கம் நடத்திவரும் நாகர் தேசீயக் 'கவுன்சில்' 'இப்போதுள்ள சூழ்நிலைகளுக்கொப்ப தனது கொள்கையை பரிசீலிப்பதற்காக' வரும் டிசம்பர் திங்களில் கூடி விவாதிக்கும் என்று 'கவுன்சில்' தலைவரான ஏ. இஜட். பிஜோ தெரிவித்திருப்பதாகக் கூறப்படுகிறது.

கடந்த 1952-ல், நாகர்களிடம் கையெழுத்து வாங்குவதின் மூலமாக வாக்கெடுப்பு நடத்தி, சுதந்திர நாக நாடு வேண்டும் என்று தேசியக் கவுன்சில் முடிவு செய்திருந்தது; அதற்குப் பிறகு இப்போது நிலைமைகள் மாறிவிட்டிருக்கின்றன; 1952-ம் ஆண்டிற்குப் பிறகு கவுன்சில், திரும்பவும்கூடவில்லை; இப்போது, வரும் டிசம்பர் திங்களில் கூடவிருக்கிறது.

பிஜோ, அந்த நாகர் சுதந்திர இயக்கத்தின் முன்னோடியாக விளங்கி வருபவர்.

"முழு சுதந்திரக் கோரிக்கையை இனியும் கைவிடப்போவதில்லையா?" என்று கேட்கப்பட்டபோது, அவர் பதில் தர மறுத்துவிட்டிருக்கிறார்.

இயக்கத்தின் தலைவர் என்ற முறையில் தான் எதுவும் சொல்ல இயலாது என்றும், 'கவுன்சில்' தான் எதிர்காலக் கொள்கை பற்றி ஒரு முடிவை மேற்கொள்ள முடியும் என்றும் அவர் தெரிவித்திருக்கிறார்.

"சுதந்திர நாக நாடு கோரிக்கை பற்றி 'நாகர் கவுன்சிலு'டன் பேச்சுவார்த்தை நடத்தத் தயாராக இல்லை," என்று துவக்க முதல், இந்திய சர்க்கார் மறுத்து வந்திருக்கின்றனர்.

உடனே நாகர் 'கவுன்சில்' இந்திய அரசியல் சட்டத்தைப் புறக்கணித்துவிட்டு, தேர்தல்களையும் பகிஷ்காரம் செய்து, அசாம் சட்டசபைக்கு அரசியல் சட்டப்படி அனுப்பவேண்டிய மூன்று பிரதிநிதிகளையும் அனுப்ப மறுத்துவிட்டது.

அதன் பின்னர், கவுன்சில், தொடர்ந்து கிளர்ச்சியில் ஈடுபட்டு வந்திருக்கிறது; அந்தக் கிளர்ச்சிக்கு 'பலாத்கார' பட்டம் சூட்டி, அதனை ஒடுக்க, இந்திய சர்க்கார், இராணுவத்தை ஏவிவருகின்றனர். வடகிழக்கு எல்லை நிர்வாகத்தினர். சுதந்திர நாக நாடுக்காக கிளர்ச்சி நடத்துபவர்களுடன் பலமுறை மோதிக்கொண்டிருக்கின்றனர்.

அண்மையில், டியான்சாங் எனும் மாவட்டத்தில் நடைபெற்ற விடுதலைப் போராட்டத்தை ஒடுக்க இந்தியப் பேரரசு, தனது இராணுவத்தில் கணிசமான அளவு அனுப்ப வேண்டியதாயிருந்தது.

## பதவியினின்றும் பெரான் விலகமாட்டார்!

### 'போராட்டம் நடத்தி எதிரிகளை ஒழிப்பார்'

பியூனஸ் அயர்ஸ், செப். 1—

அர்ஜெண்டைனா குடியரசுத் தலைவரான பெரான், தான் பதவியிலிருந்து விலகப் போவதில்லை என்று இப்போது அறிவித்திருக்கிறாராம்.

'நாட்டில் அமைதி நிலவ நான் பதவியிலிருந்து விலகுவது உதவுமானால், இதோ விலகிக்கொள்கிறேன்,' என்று அறிவித்த சில மணி நேரத்திற்கெல்லாம், மீண்டும் அவர், தான் பதவியில் தொடர்ந்து நீடிக்கப் போவதாக அறிவித்திருக்கிறார்.

பலம் மிகுந்த பெரானிஸ்தா இயக்கம், அவரது பதவி விலகலை ஏற்றுக்கொள்ள இயலாது என்று கூறிவிட்டதுடன், அவர் தொடர்ந்து பதவியிலிருக்க வேண்டும் என்று நாடு முழுவதும் ஆர்ப்பாட்டம் நடத்திக் கேட்டுக்கொண்டிருக்கின்றனர்.

'போர், போர்' என்றே அந்த இயக்கம் முழங்குகிறது.

"சர்க்காருக்கு எதிராக நடைபெறும் இயக்கங்கள் பலாத்காரத்தை உபயோகித்தால், சர்க்கார் மேலும் அதிகமான பலாத்காரம் கொண்டு அதனை அடக்குவர்; இந்தப் 'போராட்டம்' எதிரிகள் ஒழிகிறவரை தொடர்ந்து நடைபெறவேண்டும்,"

என்று, பெரானிஸ்தா இயக்கத்தவர் கூடியிருந்த இலட்சம் பேரடங்கிய கூட்டத்தில், பெரான் முழங்கியிருக்கிறார்.

"நம்மில் ஒருவர் வீழ்ந்தால், எதிரிகளில் ஐந்து பேர் விழவேண்டும்," என்று அவர் பேசியிருக்கிறார்.

************************************

தலைமைக் கழகம்: அறிக்கை—27/55

## தி. மு. கழக ஆண்டு விழாவும்—நாட்டுப் பிரிவினை வாரமும்

திராவிட முன்னேற்றக் கழகம் தோற்றங்கொண்டு, ஆறு ஆண்டுகளைக் கடந்து, ஏழாவது ஆண்டில் அடி எடுத்துவைக்கும் பெருமைகொள் விழா 17—9—55-ஆம் நாளன்று நடைபெறவிருக்கிறது.

17—9—55-ஆம் நாளிலிருந்து 23—9—55-ஆம் நாள் வரையிலுள்ள ஒரு வார காலத்தைத் திராவிட நாடு பிரிவினை வாரமாகக்கொண்டு, தி. மு. கழக ஆண்டு விழாவை மிகச் சீரிய முறையில், ஆங்காங்குள்ள தி. மு. கழகக் கிளைகளும், தி. மு. கழகத்திற்குச் சார்புடைய அமைப்புகளும் கொண்டாடுவனவாக!

தி. மு. கழகக் கொள்கைகளை விளக்கியும், கழகம் ஆற்றிய தொண்டுகளை எடுத்துக்கூறியும், திராவிட நாட்டுப் பிரிவினைத் திட்டத்தை வலியுறுத்திச் சொல்லியும் துண்டு அறிக்கைகள் வெளியிட்டு—தட்டிகள் எழுதி வைத்து—ஊர்வலங்கள் நடத்தி—பொதுக்கூட்டங்கள் கூட்டிக் கழகத் தோழர்கள் கொண்டாடுவார்களாக!

இயன்றால் கொள்கை விளக்க இசையரங்குகளும்—நாடகங்களும் இலவசமாக நடத்திக்காட்டுவார்களாக!

'அறிவகம்', சென்னை-13 }
27—8—55 }

இரா. நெடுஞ்செழியன்,
பொதுச்செயலாளர், தி. மு. க.

************************************

## இந்தியாவின் இரண்டாவது தலைநகரம்?

### ஐதராபாத் பெயர் அடிபடுகிறது

ஐதராபாத் நகரம் இந்தியாவின் இரண்டாவது தலைநகராக மாற்றப்படும் என்ற செய்தி வரவர நம்பகமாகிக்கொண்டே வருகிறது.

அங்கு ஏற்கனவே 'ராஷ்டிரபதி நிலயம்' ஏற்பட்டிருப்பது இதற்கான முதற்படியாகும்.

மாநிலங்கள் புனரமைப்புக் குழு அறிக்கையில், மொழி அடிப்படையில் ஐதராபாத்தை மூன்றாகப் பிரிக்க சிபாரிசு செய்யப்படுமென நிச்சயமாக நம்பப்படுகிறது.

அதன்படி, ஐதராபாத்தை மூன்றாகத் துண்டித்துவிட்டு, நிசாமிற்கு 'பென்ஷன்' கொடுக்கலாமென்று மத்திய சர்க்கார் தீர்மானித்திருப்பதாகவும் தெரிகிறது.

ஐதராபாத், செகந்தராபாத் ஆகிய பகுதிகளுடன் ஒட்டியுள்ள பிரதேசங்களையெல்லாம் ஒன்று சேர்த்து, டில்லியைப்போல் மத்திய சர்க்காரின் நேரடி நிர்வாகத்திலுள்ள ஒரு ராஜ்யமாக்கப்படலாம்.

இந்த ராஜ்யம்தான் இந்தியாவின் இரண்டாவது தலைநகரமாகத் திகழும். இந்திய இரயில்வே அக்கௌண்ட் நிறுவனம், மத்திய தப்பு ஆராயும் பீரோ ஆகிய மத்திய முக்கிய இலாகாக்கள் இரண்டாவது தலைநகரில் நிறுவப்படலாம்.

## தாக்குதலுக்கு நேரம் நெருங்குகிறதாம்!

"யூத அரசாங்க நாடான இஸ்ரேல்மீது, அரபுகளின் ஒருமித்த தாக்குதலுக்கான நேரம் நெருங்கிக் கொண்டிருக்கிறது; அந்நாட்டின் எல்லா பக்கங்களிலும் அரபு நாட்டுப் படைகள் குவிக்கப்படுகின்றன," என்று, யூத மொழியில், சிரியா வானொலி எச்சரிக்கை விடுத்துள்ளதாம்.

உலக பாங்கியின் ஆதரவில் ஆரம்பிக்கப்படவிருக்கும் சர்வதேச நிதி கார்ப்பொரேஷனில் உறுப்பினராகச் சேருவதற்கு இந்தியா முடிவு செய்திருப்பதாகவும், அதில் ரூ. 2,11,00,000-த்திற்கு 'பங்கு'கள் வாங்க உத்தேசித்திருப்பதாகவும், மக்கள் சபையில் நிதி அமைச்சர் அறிவித்துள்ளார்.

## திருமணங்கள்

தர்மபுரம் தோழர் தர்மலிங்கம்—தோழியர் கமலா அம்மையார் திருமணம் 28—8—55ல் நடைபெற்றது. இத்திருமண நினைவாக 'நம் நாடு' இதழுக்கு ரூ. 1 நன்கொடை தரப்பட்டது-வரப்பெற்றோம்-நன்றி-பொறுப்பாளர்.

ஃ ஃ ஃ

31—8—55 காலை 9-30 மணி அளவில், தோழர் டி. நந்தன்—தோழியர் சாரதாம்பாள் திருமணம் செங்குன்றம் அடுத்த புழல் கிராமம் காளி தெரு, எண் 57 இல்லத்தில், தோழர் கே. எம். கண்ணபிரான் தலைமையில் நடைபெற்றது. சீர்திருத்தத் திருமணத்தின் அவசியம் பற்றியும், மணமக்களை வாழ்த்தியும் தோழர் என். வி. நடராசன் சொற்பொழிவாற்றினர். மணமக்கள் சார்பில் 'நம் நாடு' இதழுக்கு ரூ. 1 நன்கொடை அளிக்கப்பட்டது — வரப் பெற்றோம்—நன்றி—பொறுப்பாளர்.

ஃ ஃ ஃ

28—8—55 காலை 9-30 மணி அளவில், சேலத்திற்கு அடுத்த காட்டேரி கிராமத்தில் தோழர் இ. ஆர். கிருஷ்ணன் தலைமையில், தோழர் தர்மலிங்கம்—தோழியர் சகுந்தலா திருமணம் நடைபெற்றது. தோழர் ஈ. வெ. கி. சம்பத் அவர்கள் சீர்திருத்தத் திருமணங்கள், நாட்டில் ஏராளமாக நடைபெறுகிறதென்றும், அத்தகைய திருமணங்கள் நமக்கு மிகப் பழமையானதுதான் என்றும், இந்நாட்டில் ஆரியர்கள் வந்து புகுந்த பிறகுதான் வைதீகம் நுழைக்கப்பட்டது என்றும், தமிழ் நூற்களில் எப்படியெல்லாம் திருமணங்கள் நடைபெற்றது என்றும் விளக்கிப் பேசி, மணமக்களை வாழ்த்தினர்.

அதுசமயம், தோழர் தேவராசன் பெண் குழந்தைக்கு தோழர் ஈ. வெ. கி. சம்பத் அவர்கள் 'மல்லிகா' என்று பெயர் சூட்டினார். இந்நிகழ்ச்சிகளின் நினைவாக அனுப்பப்பட்டுள்ள ரூ. 2-ம் வரப் பெற்றுள்ளோம்.

ஃ ஃ ஃ

21—8—55 காலை 10 மணி அளவில், மதுரை திருவாப்புடையார் கோவில் எதிர்ப்புறமுள்ள பெருமனையில் தோழர் பூ. கணேசன் தலைமையில், தோழர் ஜி நடராசன்—தோழியர் கஸ்தூரி திருமணம் நடைபெற்றது. மணமக்களை வாழ்த்தி, தோழர்கள் வி. சௌந்தராசன், ரங்கரத்தினம் மற்றும் பலர் பேசினர். இதன் நினைவாக 'நம் நாடு' வளர்ச்சிக்கு ரூ. 2 நன்கொடை தரப்பட்டது. வரப்பெற்றோம்—நன்றி—பொறுப்பாளர்.

ஃ ஃ ஃ

1—9—55 காலை 7 மணியளவில், வாணியம்பாடி வ. ஆ.-ல், தோழர் சாமிநாதன் தலைமையில், தோழர் கிருட்டிணன்—தோழியர் கமலா அம்மையார் திருமணம் நடைபெற்றது. தோழர் வி.என். தத்தப்பன், மற்றும் பலர் மணமக்களை வாழ்த்திப் பேசினர்.

# ‘காஷ்மீர் — பாகிஸ்தானின் தேசீயப் பிரச்சினையாகும்’

## எல்லாக் கட்சித் தலைவர்களின் மாநாடு கூட்ட பிரதமர் சௌத்ரி முகம்மது அலி முடிவு

கராச்சி, செப் 2—

காஷ்மீர் பிரச்சினையைத் தீர்ப்பதற்காக தேசியத் திட்டம் ஒன்றை உருவாக்கும் நோக்குடன் ஆஜாத் காஷ்மீர் தலைவர்கள் உள்ளிட்ட எல்லாக் கட்சித் தலைவர்களின் மாநாடு ஒன்றினை இந்த திங்களில் கூட்டப் போவதாக பாகிஸ்தான் பிரதமர் சௌத்ரி முகமதலி தெரிவித்திருக்கிறார்.

பதவி ஏற்ற பிறகு தனது கொள்கை பற்றி விரிவாக விளக்கிய அவர் குறிப்பிட்டதாவது :—

“காஷ்மீர் பிரச்சினையை ஒட்டி பெரிய நெருக்கடி ஏற்பட்டிருக்கிறது; அந்தப் பிரச்சினைக்கு சீக்கிரமே முடிவு காணவேண்டும் என்பதில் நாம் பொறுமை இழந்துவிட்டிருக்கிறோம்;

“காஷ்மீர் மக்களுக்கு நாம் தந்திருக்கிற உறுதிமொழியைக் காப்பாற்ற நமது அதிகாரத்திற்குட்பட்ட அத்தனை நடவடிக்கைகளையும் மேற்கொள்ளுவோம்;

“காஷ்மீர் பிரச்சினை, பாகிஸ்தானின் ஒரு தேசீயப் பிரச்சினை; இன்னமும், அதற்குப் பரிகாரம் தேடுவதில் காலந் தாழ்த்தக் கூடாது”

‘காஷ்மீரை விடுவிக்க வேண்டும்,’ என்பதற்காக ‘சத்தியாக்கிரக இயக்கம்’ நடத்தத் திட்டமிட்டுள்ள தலைவர்கள், தேசிய மாநாடு முடிவெடுக்கும்வரை பொறுத்திருக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்,’ என்றும் குறிப்பிட்டிருக்கிறார்.

---

## ‘எங்கள் கொள்கை தெளிவானது’

### மலேயா பிரதமர் முழக்கம்

“இன்னும் நான்கு ஆண்டுகளுக்குள் மலேயாவுக்கு பிரிட்டன் சுதந்திரம் அளிக்க வேண்டும்; உண்மையான தேசிய உணர்ச்சி உருவாவதற்கு பிரிட்டன் அனுமதிக்க வேண்டும்—அல்லது, கம்யூனிஸ்டுகளிடம் நாட்டைக் காட்டிக் கொடுக்க வேண்டும்”

என்று, மலேயா பிரதமர் தெங்கு அப்துர்- ரகிமான், மலேயாவின் புதிய சட்டசபைக் கூட்டத்தில் குறிப்பிட்டுவிட்டு மேலும் சொன்னார் :—

“எங்களுடைய கொள்கை தெளிவானது—‘சுதந்திரம் பெறுவது அல்லது வெளியேறுவது’—என்பதுதான் அது; குறிப்பிட்ட காலத்திற்குள் சுதந்திரமும், சுய ஆட்சியும் அளிக்காவிடில், மந்திரி சபையில் நாங்கள் நீடித்திருப்பதில் என்ன பலன் உண்டு?”

★

### தேதி நிர்ணயிப்பதை விரும்பவில்லையாம்!

“‘பொறுப்பை சரிவர நிர்வகிக்க முடியும்’ என்று எங்களுக்குத் திருப்தி ஏற்படும் வரையில் மலேயாவின் உள்நாட்டுப் பாதுகாப்புப் பொறுப்பை மலேயாவுக்கு மாற்றும் பிரச்சினை பிரிட்டனுக்குக் கிடையாது; மக்கள் பிரச்சினைகளைப் பற்றி யோசிக்கையில், மலேயாவின் சுதந்திரத்திற்கு தேதி நிர்ணயித்துக் கொள்வதை நான் விரும்பவில்லை,”

என்று, பிரிட்டிஷ் காலனி மந்திரி ஆலன் லெனக்ஸ் பாய்ட் தெரிவித்துள்ளார்.

---

### ‘பூஜா’—நாடகம்

4—9—55 மாலை 6 மணிக்கு. சென்னை-எழும்பூர் மியூசியம் தியேட்டரில், கேரளீய வாசன சாலையின் நிதிக்காக, கேரளீய கலா நாடக சபையினரால், ‘பூஜா’—எனும் மலையாள நாடகம், திரு. டாக்டர் பி. வி. செரியன் தலைமையில் நடைபெறும்

---

## வேலை கிடைக்காத தொழிலாளர்கள்

### வேலை செய்த தொழிலாளரைத் தாக்கினராம்!

அம்பாசமுத்திரம், செ. 1—

அன்றாடக் கூலிக்கு வேலை பார்க்கும் சிலருக்கு வேலைதர மறுக்கப்பட்டதின் விளைவாக மணிமுத்தாறு அணைக்கட்டு வேலை ஒரு நாள் நிறுத்திவைக்கப்பட்டிருக்கிறது.

கூலியாட்கள் அத்தனைபேருக்கும் வேலைதர இயலாது என்று ‘காண்டிராக்டர்’கள் கூறியதின் விளைவாக, வேலை கிடைக்கப் பெறாத தொழிலாளர்களில் சிலர், வேலை செய்துகொண்டிருந்த தொழிலாளர்கள் மீது கற்களை வீசி எறியத் துவங்கினராம்.

அதனால் ஒரு லாரி ஓட்டுபவர் உட்பட பலருக்குக் காயம் ஏற்பட்டதாம் காயம் பட்டவர்கள் எல்லாம் மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டிருக்கின்றனர்.

வேலை அமைதியாக நடைபெறுவதற்கு உதவி புரியும் வகையில் தங்களுக்குப் பாதுகாப்புத் தருமாறு அணைக்கட்டு வேலையில் ஈடுபட்டிருப்போர், மந்திரிகளுக்குத் தந்தி அடித்திருக்கின்றனராம்.

மறுநாள் சுமார் 200 பேர்களுக்கு ‘காண்டிராக்டர்’கள் வேலை தந்திருக்கின்றனர்; இப்போது வேலை அமைதியாக நடைபெறுகிறதாம்.

இதற்கு முன்பாகவே மணிமுத்தாறு அணைக்கட்டுத் தொழிலாளர் சங்கம் சில கோரிக்கைகளுக்காக வேலை நிறுத்த நோட்டீஸ் தந்திருந்ததாம்; ஆனால், அதிகாரிகள், தொழிலாளர்களின் கோரிக்கைகளை ஏற்றுக்கொண்டதின் பேரில், வேலை சுமுகமாக நடைபெற்று வருவதாகத் தெரிகிறது.

---

## டாக்டர் அமர்நாத் ஜா இயற்கை எய்தினர்

பாட்னா, செப். 2—

பிரபல கல்வி நிபுணரான டாக்டர் அமர்நாத் ஜா, தமது 59-வது வயதில், ஏற்பட்ட மார்வலியினால் இன்று இயற்கை எய்தினார்.

இவர் தற்சமயம், பீகார் பொதுப் பணித் தேர்வுக் குழுத் தலைவராக இருந்து வந்தார்.

அலகாபாத்தில் கல்வி பயின்ற இவர், அங்குள்ள ம்யூர் கல்லூரியில் ஆங்கிலப் பேராசிரியராக 1937-ல் அமர்ந்தார்.

ஆங்கில இலக்கியத்தில் பெரும் ஆர்வங்கொண்ட இவர், ஆசிரியராக விளங்கியதுடன், மராத்தி, வங்காளி, உருது ஆகிய மொழிகளிலும், நல்ல ஆராய்ச்சி உடையவர்.

இந்திமொழி பரப்பப்பட வேண்டும் என்பதில் அக்கறை கொண்டிருந்தவரும்கூட!

இளைஞர்களைப் பயிற்றுவிக்கும் உலக நாடுகள் ‘லீக்’ குழுவில் 1934-ல் அங்கம் வகித்திருக்கிறார் ஐ. நா. கலாச்சார கல்வி நிறுவனத்திற்கு இந்தியத் தூதுக் குழுவில் பிரதிநிதியாகவும் 1945-ல் இருந்திருக்கிறார்.

அமர்நாத் ஜா, அலகாபாத் பல்கலைக் கழகத்தினுடையவும், காசி பல்கலைக் கழகத்தினுடையவும் துணைவேந்தராக நெடுநாட்கள் பணியாற்றியிருக்கிறார்.

அகில இந்திய கல்வி மாநாட்டிற்கு 1941-ல் தலைமை தாங்கியிருக்கிறார்.

உத்திரபிரதேச பொதுப் பணித் தேர்வுக் குழுவின் தலைவராக 1947-ல் இருந்திருக்கிறார்.

பீகார் பணித் தேர்வுக் குழுத் தலைவராக 1953-ல் நியமிக்கப்பட்டார்.

இவரது மறைவு குறித்து, இந்திய உள்நாட்டு மந்திரி பண்டித பந்த் வருத்தம் தெரிவித்திருக்கிறார்.

---

## கழகக் கூட்டங்கள்

★

மீஞ்சூர்

கடை வீதி திடலில்

4—9—55 மாலை 6 மணிக்கு

தலைவர் : தி. க. சவுமியான்

பேசுவோர்:

என். வி. நடராசன்

சி. பி. சிற்றரசு

முகவை ஆர்.எஸ்.பாண்டியன்

★

சென்னை (திருவொற்றியூர்)

சன்னதி தெருவில்

5—9—55 மாலை 6 மணிக்கு

தலைவர்: வை. பார்த்தசாரதி

பேசுவோர்:

கண்ணதாசன்

காஞ்சி-கல்யாணசுந்தரம்

---

### வாணியம்பாடியில் பொதுக்கூட்டம்

4—9—55 மாலை 5 மணிக்கு, வாணியம்பாடி வாரச் சந்தை அருகில், நகர நல கண்காணிப்புச் சங்கச் சார்பில், தோழர் ஆர். திருஞானம் தலைமையில், ‘நகரசபைத் தேர்தலும், வாக்காளரின் கடமையும்’ என்பது பற்றி, தோழர்கள் முல்லை சத்தி, க. நெடுஞ்சோழன், எம் நடேசனார், வி. என். தத்தப்பன், கே. குமார், எஸ். கோபால், மற்றும் பலர் பேசுவர்.

---

### திருமணங்கள்

4—9—55 காலை 8 மணிக்கு, சென்னை-புரசை, எண் 18, சுப்ராய செட்டி 2-வது தெருவில், தோழர் கே. பழனீ—தோழியர் அம்சாபாய் திருமணம் நடைபெறும். தோழர்கள் கண்ணதாசன், ஆர். எஸ். பாண்டியன், டி. எஸ். வேலன் ஆகியோர் பேசுவர்.

ஃ ஃ ஃ

4—9—55 காலை 7½ மணிக்கு. சென்னை—வண்ணையம்பதி, எண் 66, மணியக்கார சத்திர சாலையில், தோழர் மே. அருணசலம்—தோழியர் தனலட்சுமி திருமணம், தோழர் க. கணேசன் தலைமையில் நடைபெறும். தோழர்கள் கண்ணதாசன், தியாகராசன், தோழியர் தேசியமணி ஆகியோர் பேசுவர்.

---

## சென்னை—ஆந்திரா எல்லைப் பிரச்சினை

### மாநில மந்திரிகள் பேச்சுவார்த்தை

புதுடில்லி, செப். 2—

இரு மாநிலங்களுக்குமிடையேயுள்ள எல்லைத் தகராறுகள் பற்றி ஆந்திர உதவி முதன் மந்திரி என் சஞ்சீவி ரெட்டியும், சென்னை நிதி மந்திரி சுப்பிரமணியமும், இன்று இங்கு பேசுவார்த்தைகள் நடத்தினர்.

பேச்சுவார்த்தைகள் சுமுகமாகவே நடைபெற்றதாகவும், தான் ஏற்கனவே அறிவித்துள்ளபடி, வரும் டிசம்பர் 31-ந் தேதிக்குள் பிரச்சினைக்கு ஒரு முடிவுகாண இயலுமென தான் நம்புவதாகவும், மந்திரி சுப்பிரமணியம் தெரிவித்திருக்கிறார்.

மேலும் தொடர்ந்து பேச்சுவார்த்தைகள் நடைபெறும்போது காமராசரும், கோபால ரெட்டியும் அதில் கலந்துகொள்வர் என்று தெரிகிறது.

---

## புதுவையில் மீண்டும் புதுத் தேர்தல்?

புதுடில்லி, செப். 1—

“சட்ட பூர்வமான அதிகார மாற்றத்திற்குப் பின்பு, புதுவையில் புதுத் தேர்தல் நடக்கும்,” என்று, மக்கள் சபையில் அறிவிக்கப்பட்டுள்ளது.

‘இப்பொழுதுள்ள சட்டசபைக்கு சட்டங்கள் இயற்றும் அதிகாரம் கிடையாது’ என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

---





## அமெரிக்கத் தொழிலாளர் தினம்

### வரலாற்றை உருவாக்கிய பாட்டாளிகளின் பெருநாள்!

தொழிலாளர் சங்கங்களின் ஆற்றலும், ஒற்றுமை உணர்ச்சியும் புலப்படும்படி வருடத்தில் ஒரு நாளைத் தேர்ந்தெடுத்து, அன்று தொழிலாளர்கள் ஊர்வலங்கள், வன விருந்து முதலிய பல கேளிக்கைகள் நடத்த வேண்டுமென்றும், 1882-ம் ஆண்டில் நியூயார்க்கில் கூறப்பட்டது.

அதே போன்று, 1882 செப்டம்பர் 5-ந் தேதி—அமெரிக்காவின் முதலாவது தொழிலாளர் தினமாயிற்று; நியூயார்க் நகரில் அன்று நடைபெற்ற தொழிலாளர் ஊர்வலம் மிகப் பெரிது.

அன்று, அமெரிக்காவில் மிக்க ஆற்றலோடு விளங்கிய தொழிலாளர் சங்கம், ‘தொழிலாளர் வீரர்கள் சங்கம்’ என்பதுதான்.

“நாள் ஒன்றுக்கு வேலை நேரம் 8 மணி நேரமே; ஆண்களுக்கும்—பெண்களுக்கும் கூலி ஒன்றே; கைதிகளிடமும், சிறுவர் - சிறுமியரிடமும் வேலை வாங்கக் கூடாது; கூட்டுறவுச் சங்கங்கள் தோன்ற வேண்டும்” — என்றெல்லாம் முதன் முதல் சொல்லத் தொடங்கியதும் அச்சங்கமே!

ஆண்டுதோறும், அமெரிக்காவில், செப்டம்பர் மாதத்தின் முதல் திங்கட்கிழமையன்று நடக்கும் ஊர்வலங்களும், வன விருந்துகளும், உல்லாசப் பயணங்களும், வாண வேடிக்கைகளும், மற்றும் பல கேளிக்கைகளும் அமெரிக்காவின் இலட்சக்கணக்கான தொழிலாளர்களுடைய சுதந்திரத்தை நன்கு புலப்படும்படி எடுத்துக் காட்டுவனவாகும்.

* * *

இத்தினத்தையொட்டி, ஜனாதிபதி ஐசன்ஹோவர் விடுத்துள்ள செய்தி பின்வருமாறு :—

“அறிவாலும், உழைப்பாலும், ஊக்கத்தாலும், நாட்டின் செல்வத்தைப் பெருக்கும் தொழிலாளருக்கு வணக்கம் சொல்லும் நாள் இந்த நாள்;

“அமெரிக்க நாட்டுத் தொழிலாளர்கள் சுதந்திரம்—தன்மதிப்பு—திறமை—ஊக்கம் உள்ளவர்களாய், தங்களுக்கு விருப்பமான வேலையை விருப்பமான இடத்தில்—தகுதியான ஊதியம் பெற்றுச் செய்வது குறித்து நாம் அனைவரும் பெருமைகொள்கிறோம்;

“தொழிலாளரை நாம் கௌரவிக்கும்போது, நெடுங்காலம் உழைத்து அமெரிக்கத் தொழிலாளர் உருவாக்கிய நாட்டின் மீது நமக்குள்ள பற்றை, நாம் உறுதிப்படுத்தியவர்களாகிறோம்”

---

ஆங்கில மொழி......

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

“வெள்ளையர் வெளியேறிவிட்டனர் என்றாலும், அவர்கள் விட்டுச் சென்ற—நமக்கு நன்மை பயக்கக் கூடிய எல்லாவற்றையும் நாம் காப்பாற்றிக்கொள்ள—நீடித்து நிலைநாட்டிக்கொள்ள வேண்டுவது நியாயமான ஒன்றாகும்;

“மொழிப் பிரச்சினையில் நாம் துண்டுபட்டுவிடக் கூடாது;

“நம்மிடையே இந்தியா ஒன்றுபட்டு, (துண்டாடப்படாமல்—பிரிக்கப்படாமல்) ஒரே நாடாகவே இருக்க வேண்டும் என்று நாம் உறுதியாக எண்ணினால், மொழிப் பிரச்சினை போன்ற இதர பிரச்சினைகளுக்கும் தாமாகவே முடிவு கிடைத்துவிடும்”

---

## சட்டசபை உறுப்பினர் என்று ஆள்மாறாட்டம் செய்தவர்

### ஒரு மாதக் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டார்

சென்னை, செப். 2—

தன்னை ஒரு சட்டசபை உறுப்பினர் என்று கூறி, தனக்குரிய சம்பள பாக்கியைத் தருமாறு சட்டசபை உதவிச் செயலாளரிடம் கேட்ட தஞ்சையைச் சேர்ந்த பி. கோபாலராஜன் என்பவருக்கு எழும்பூர் 5-வது மாகாண நீதிபதி ஒரு மாதக் கடுங்காவல் தண்டனை விதித்திருக்கிறார்.

இந்த மனிதர், கடந்த ஜூலை 1-ந் தேதியன்று, கோபாலகிருஷ்ணன் என்ற சட்டசபை உறுப்பினர்தான் தான் என்றும், தனக்குரிய சம்பளப் பாக்கியைத் தர வேண்டும் என்றும் கோரி கடிதம் ஒன்று எழுதி சட்டசபை செயலாளரிடம் தந்திருக்கிறார். அது பற்றி விசாரித்தபோது இவர் ‘ஆள் மாறாட்டம்’ செய்கிறார் என்று தெரிந்து கைது செய்யப்பட்டார்

---

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம். ஏ., அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று, (24, சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர் : இரா. நெடுஞ்செழியன் எம். ஏ.

